[28th August 1961

களுக்கு முன் பாராளுமன்றத்தில் அமைச்சர் அவர்கள் பதில் சொல்லி இருக்கிறார்கள். அதாவது, இதை இரண்டாகப் பிரித்து வைக்கப் போகிறோம் என்று சொன்னார்கள். அப்படியானால் அது தவறு என்று கனம் அமைச்சர் அவர்களைக் கேட்கிறேன்?

THE HON. SRI R. VENKATARAMAN : அதை யார் சொன்னார்களோ அவர்களிடம் அந்தக் கேள்வியைப் போட வேண்டும். நான் சொல்லவில்லை.

SRI M. KALYANASUNDARAM : ஸார், ஹெவி எலக்ட்ரிகல் பிளாண்டையும், இந்த பாய்லர் பாக்டரியையும் நிறுவுவதற்கு திருச்சிதான் மிகச் சிறந்த இடம் என்று நிபுணர் குழு சொல்வதாக நான் சொல்கிறேன். இதை அமைச்சர் அவர்கள் மறுக்க முடியுமா?

THE HON. SRI R. VENKATARAMAN : கனம் அங்கத்தினர் அவர்கள் இதைக் கூறிக் கொண்டே இருக்கலாம் என்று நான் சொல்லிக் கொள்கிறேன்.

*Express Bus (Madras to Salem)*

* *Q.* No 1456 SRIMATHI S. HEMALATHA DEVI : கனம் கைத்தொழில் அமைச்சர் தயவுசெய்து கீழ்க்கண்ட கேள்விக்குப் பதிலளிப்பாரா—

சென்னையிலிருந்து ஜோலார்பேட்டை, கிருஷ்ணகிரி, தர்மபுரி வழியாக சேலத்திற்கு ஒரு எக்ஸ்பிரஸ் பஸ் விட அரசாங்கத்திற்கு உத்தேசமுண்டா?

THE HON. SRI R. VENKATARAMAN : No, Sir.

SRIMATHI S. HEMALATHA DEVI : தலைவர் அவர்களே, இப்போது சேலம் ஜில்லாவில் ஓமலூர் தாலுகாவிலிருந்து அல்லது தர்மபுரி தாலுகாவிலிருந்து சென்னைக்கு வரவேண்டுமென்றால் சேலத்திற்கோ அல்லது ஜோலார்பேட்டைக்கோ சென்று பின் அங்கிருந்து மற்றொரு பஸ்ஸோ அல்லது ரயில் மூலமாகவோ சென்னை வரவேண்டியிருக்கிறது. இப்படிப்பட்ட கஷ்டங்கள் இருப்பதால் பொதுமக்கள் மிகவும் கஷ்டப்படுகிறார்கள். பொது ஜனங்களின் சௌகரியத்திற்காகவே இருக்கும் இந்த சர்க்கார், அவர்களின் சௌகரியத்திற்காக சேலத்திற்கும், சென்னைக்கும் ஜோலார்பேட்டை வழியாக இன்னொரு பஸ்ஸை விடுவதற்கு வசதி செய்வார்களா என்று அறிய விரும்புகிறேன்?

THE HON. SRI R. VENKATARAMAN : சேலத்திற்கும் சென்னையிலிருந்து இரண்டு எக்ஸ்பிரஸ் பஸ்கள் விடப்படுகின்றன. மற்ற இடங்களில் இன்னும் பஸ்களே விடவில்லை. ஆகவே, இந்த இடங்களுக்கு விடப்பட்ட பிறகு, இதற்கு மூன்றாவது பஸ் விடுவது பற்றி யோசனை செய்யப்படும்.

28th August 1961]

**SRI K. R. NALLASIVAM** : இந்த எக்ஸ்பிரஸ் பஸ்கள் விடுவதற்கு சர்க்கார் என்ன தேவைகளை எதிர்பார்க்கிறுர்கள்? எந்த அடிப்படையில்?

**THE HON. SRI R. VENKATARAMAN** : ஒவ்வொரு வருஷத்திற்கும் சில எக்ஸ்பிரஸ் பஸ்கள் கட்டி முடிக்கப்படுகின்றன. அப்படி கிடைக்கும் பஸ்களை முக்கியத்துவம் கொடுக்கப்பட்டுள்ள இடங்களுக்கு முதலில் கொடுப்பதற்கு ஏற்பாடு செய்யப்படுகிறது. ஆகவே, அந்தந்த ஊர், இடம், ப்ரையாரிடி ஆகியவைகளைப் பார்த்து, அந்த அடிப்படையில் கொடுத்துக்கொண்டு வருகிறோம்.

**SRI M. KALYANASUNDARAM** : அமைச்சர் அவர்கள் சேலத்திற்கு மூன்று பஸ்கள் விடுவது பற்றி யோசிக்கப்படும் என்று சொன்னுர்கள். அப்படி விடப்படும் பஸ் சேலத்திற்கு தர்மபுரி வழியாகச் செல்ல வேண்டுமென்று சொல்லப்பட்டது. அப்படி விடுவதற்குக் கஷ்டமாக இருந்தால், மேட்டூர் வரைக்கும் விடுவதற்கு அதாவது சென்னை-மேட்டூர் வரை பஸ் விடுவதற்கு நடவடிக்கை எடுப்பார்களா?

**THE HON. SRI R. VENKATARAMAN** : இந்த ஆலோசனையை டைரக்டர் அவர்களுக்கு எழுதி அனுப்பினுல், மற்றவைகளோடு பரிசிலனை செய்வார்கள்.

**SRI S. NAGARAJA MONIGAR** : ஸார், இப்போது கேட்கும் மார்க்கம் மிக முக்கியமானது என்ற காரணத்தினுல், சேலத்திற்கு இரண்டு பஸ்கள் விடப்பட்டாலும், இப்போதுள்ள இரண்டு ரயில் மார்க்கங்கள் அதாவது மொரப்பூர்-சேலம் 72 மைல் தொலைவுக்கும், திருப்பத்தூர்-கிருஷ்ணகிரி 26 மைல் தொலைவுக்கும் இடையே ரயில் நிற்காமல் செல்வதால் அங்குள்ள மக்கள் மிகவும் கஷ்டப்படுகிறுர்கள். ஆகவே, இந்த பஸ் மார்க்கத்திற்கு மிகவும் முக்கியத்துவம் கொடுத்து ஜோலார்பேட்டை, சூரமங்கலம் வழியாகச் செல்வதற்கு அமைச்சர் அவர்கள் முயற்சி எடுப்பார்களா என்று அறிய விரும்புகிறேன்.

THE HON. SRI R. VENKATARAMAN : This is only a request. It is not an interpellation.

*Sugar factory workers (Wages)*

* 1457 *Q.*—SRI M. KALYANASUNDARAM : Will the Hon. the Minister for Industries be pleased to state—

(*a*) the steps taken by the Government for ensuring the implementation of the recommendations of the Sugar Wage Board by the sugar factories in the State; and

(*b*) whether a separate Committee would be constituted for determining the wages and service conditions of the farm-workers attached to the sugar factories?

THE HON. SRI R. VENKATARAMAN : (*a*) The Government convened a Conference of the representatives of the workers and managements of the sugar factories on 22nd June 1961 and